சிவமயம்

# சிவயோக சுவாமிகள் காட்டிய வழி

## அறிமுகவுரை

யாழ்ப்பாணம் கொழும்புத்துறை யோகசுவாமிகளை இலங்கையிற் பிறந்து வளர்ந்து தற்போது நடுத்தரவயது எய்தினவர்களிலோ அல்லது மூத்தோர்களிலோ அறியாத வர்கள் இல்லை என்று சொல்லலாம். அவர் பல்லாண்டு காலமாக மக்களின் பேரன்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய வராகவும், பிறவிக்கடலில் இருந்து மனிதர் கரையேறுவதற்கு வழிகாட்டும் கலங்கரை விளக்காகவும், நடமாடும் தெய்வ மாகவும் விளங்கி 1964ம் ஆண்டு மகாசமாதி அடைந்தார்.

பலவகைப்பட்டோர்- பட்டம் பதவியில் உள்ளவர்களும் பாமரரும், பலசாதி சமயத்தினரும், கடவுள் நம்பிக்கை இல்லாத வர்களுங்கூட இம் முனிவரைத் தரிசித்து ஆறுதல் தேடினர். வைத்தியர் ஒருவர் நோயாளிக்கு மருந்து கொடுக்குமாப்போல், பக்தர்களுக்குப் போதனைகளையும் ஆசிகளையும் வழங்கி வந்தார். சுவாமிகளது சந்நிதானத்தில் சிவபுராண பாராயணம் செய்யும் பக்தர்கள் பாராயண முடிவில் தங்கள் பிரச்சனை களுக்குத் தத்தம் மனதிலே விடைகண்டு சுவாமிகளை வணங்கிச் செல்வர். ஒரு பிரபல இஸ்லாமிய நீதியரசர் தான் நீதிமன்றம் செல்லுமுன் தனது தீர்ப்புக்கள் சரியாக இருப்பதற்குப்

பிரார்த்தனையாகச் சுவாமிகளை வணங்கி அவரது ஆசிகளைப் பெற்றுச் செல்வது அந்தக் காலத்தில் பலரும் அறிந்த விடயம்.

காவி அணியாது உருத்திராக்கமும் தரியாது வெள்ளைத் தாடி வெள்ளை முடியுடன் முழங்காலுடன் மடித்துக் கட்டிய வேட்டியுடன் இம் முனிவர் மெல்ல மெல்லமாக நல்ல சூடான தார் ரோட்டில் நடந்து செல்வது ஓரற்புதக்காட்சி. பலர் தங்கள் மோட்டார் வாகனங்களை நிறுத்தி சுவாமிகளை வேண்டிய இடத்திற்குக் கொண்டுபோய் விடுவதற்குக் கேட்டாலும் போக மாட்டார். சிலரைத் தாமாகவே நிறுத்தி அவர்கள் வாகனத்தில் ஏறிச் செல்வார். இவர்கள் தாங்கள் பெற்ற அதிர்ஷ்டத்தை பெரும் பேறாக எண்ணி வணங்குவர். சில பக்தர்கள் வீட்டில் சிறிது நேரம் தங்குவார். கஸ்தூரியார் வீதியில் உள்ள பிரபல முத்துக்குமாரசுவாமி வைத்தியர் இல்லமும் சுவாமி தங்கும் இடங்களில் ஒன்று. வைத்தியர் நோயாளிகளுக்கு மருந்துகள் சரக்குவகைகள் எழுதிக் கொடுக்கும்போது தனது கையால் வாங்கிக் கொடுப்பார். இவர்கள் வருத்தங்கள் குணப்பட்டது பற்றிச் சொல்லத் தேவையில்லை. ஆஸ்பத்திரிகளிலிருந்து கைவிடப்பட்ட தீராத நோய்களுக் குட்பட்ட பக்தர்கள் பலர் சுவாமிகள் கையால் மருந்து வாங்கிப் பயனடைந்து பரவசப் பட்டிருக்கிறார்கள். உலக வாழ்க்கையில் துன்பங்களுக்கும் இன்னல்களுக்கும் உட்பட்ட பல பக்தர்களும் சுவாமிகளின் ஆசிகளினால் நிவாரணம் அடைந்திருக்கிறார்கள்.

## இளமையில் ஆத்மீக வாழ்க்கை

சுவாமிகள் 1872ம் ஆண்டு வைகாசி மாதம் அவிட்ட நட்சத்திரத்தில் மாவிட்டபுரத்தில் அம்பலவாணருக்கும் சின்னாச்சி அம்மையாருக்கும் புத்திரனாகப் பிறந்து, கொழும்புத்துறையில் வசித்த சிறிய தகப்பனாரான சின்னையா யோசப் என்பவருடன் வளர்ந்து வந்தார். யோகநாதன் என்னும்

பெயருடன் சம்பத்திரிசிரியர் (St. Patricks College) கல்லூரியில் ஆங்கிலம் படித்து இரணை மடுவில் உள்ள நீர்ப்பாசன இலாகாவில் களஞ்சியப் பொறுப்பாளராக (Storekeeper) உத்தியோகம் பார்த்தார். இளம்வயதிலேயே கடவுள் வழிபாடு, தியானம், போன்ற ஆத்மீகவாழ்வில் ஈடுபட்டிருந்தார். கிறிஸ்தவ சூழலில் இருந்தபடியால் இவர் யோன் என்றும், பின்னர் யோகசுவாமி என்றும் அழைக்கப்பட்டதாகத் தெரியவருகிறது. இவர் உத்தியோகத்தில் நேர்மையும் திறமையும் உள்ளவராகவும் ஆங்கிலேய மேலதிகாரிகளினால் பெரிய மதிப்புப் பெற்றவராகவும் இருந்தார். சில காலத்தின் பின் உத்தியோகத்தை விட்டெறிந்து முழுமையாக ஆத்மீக வாழ்வில் ஈடுபட்டார்.

## குருவைத் தேடல்

குருவருள் இன்றித் திருவருள் இல்லை. குருவைத் தேடி அலைந்து நல்லூர்த் தேரடியில் பலர் பித்தனென்றும் சிலர் சித்தனென்றும் சொல்லிய செல்லப்பாச் சுவாமியை வந்தடைந் தார். செல்லப்பா சுவாமிகள் யோகநாதரைப் பல சோதனைக் குள்ளாக்கியே சீடனாகவேற்றார். இதனை "அன்னை ஒத்த அன்பு உடையான் அன்பிலாதவன் போல் துன்புறுத்தி நிற்பான்" "சோதித்தேயென்னைச் சும்மாயிருத்தினான்" என்று சொல்லுகிறார்.

பலர் பைத்தியக்காரன் என்று பரிகாசஞ் செய்யும் செல்லப்பனை யோகநாதன் "நல்ல மருந்தொரு குரு மருந்தை, ஞான தேசிகனை நல்லூரில் கண்டேனே" என்று பாடுகிறார். "சொல்லச் சொல்லச் சுவைக்கும் செல்லப்பன் திருநாமம்" என அவர் நாமத்தைப் போற்றுகிறார். "ஒப்புவமை இல்லாத அப்பனே செல்லப்பனே" எனவும் கடவுளே சற்குருவாக வந்து சந்தேகம் தீர்த்தாண்டான் எனவும், நல்லூர்த் தேரடியில் நான் கண்ட சிவயோகம் சொல்ல முடியாத சுகத்தினைக் காட்டி விடும் என்றும் பாடுகிறார்.

## சற்குரு தீட்சை

ஒரு நாள் நல்லூர்க் கந்தன் திருமுன்றிலில் "யாரடா நீ" என்று அதட்டினான். அன்றே யான் பெற்றேன் அருள். அருள் ஒளிக்குள்ளே புகுந்து சென்றேன் யான். மலைத்து நின்ற என்னை உற்றுநோக்கி பயம் தீரும் வண்ணம் "ஒரு பொல்லாப்பு மில்லை" என்று ஓதினான் "அப்படியே உள்ளது காண் ஆரறிவார்" என்றான் ஒப்பில்லா மாதவத்தோன். தன்னொப்பார் இல்லாத் தலைவன் திருவருளால் என்னொப்பாரின்றி இருந்தேன், என்று உருக்க மாகவும் அழகாகவும் தான் சற்குருவின் தீட்சை பெற்றதுபற்றி நற்சிந்தனையில் ஆசானைக் கண்டேன் என்னும் தலைப்பில் பாடுகிறார். ஆசானருளால் ஆசானாயினார்.

## சிவதொண்டு

ஆசானாகிய யோக சுவாமிகள் கொழும்புத்துறையிலே தாம் இருந்து தவம் செய்த இலுப்பை மரத்தினருகே இருந்த பழங் குடிலைக் கோயிலாய்க் கொண்டனர். அவர் கோயில் கொண்ட இடத்தின் திருப்பொலிவு பற்றிய ஒரு விடயத்தைக் கூறுதல் பொருத்தமாகும். சிக்காகோவிலிருந்து திரும்பிய சுவாமி விவேகானந்தர், யாழ்ப்பாண மக்களால் வீதிவலமாக அழைத்துச் செல்லப்பட்ட வேளையிலே யோகசுவாமிகள் உறைய இருக்கும் இவ்விடத்திலே நின்று " இது ஒரு பாலைவனப் பசுந்தரையாக உளது" எனக் கூறியதே அவ்விடயமாகும். இத்தகைய "சீராரும் தெய்வத் திருவருளாம் பூமியே" யோகசுவாமிகள் ஐம்பது ஆண்டு காலமாக உறைந்து சிவதொண்டாற்றித் திருவடிக் கலப்புற்ற புண்ணிய பூமியாம். இப்புண்ணிய பூமியிலே ஞானத்திருவுருவாய் அமர்ந்திருந்த யோகசுவாமிகளின் திருப்பாதத்தில் ஞானநூற்பயிற்சி பெற்றவருடன் சமயஅறிவு சற்றுமில்லாத பாமரரும், சைவாசார சீலரும், ஏனைச் சமய நெறிகளில் தலைநின்றோரும், மற்றும் நாஸ்திகரும்

கும்பிட்டுக்கிடந்தனர். சுவாமிகள் தம்மை அண்டிவந்த அனைவருக்கும் வாழ்வளிக்கும் வள்ளற் பிரானாய்த் திகழ்ந்தனர். சுவாமிகளது அடியவர்களான அரசாங்க உத்தியோகம் பார்க்கும் பலர் நாட்டின் பலபாகங்களிலும் பணியாற்றினர். உத்தியோக அலுவல்களில் பிணைக்கப்பட்டிருந்த அவர்களுக்கு அடிக்கடி கொழும்புத்துறை வந்து சுவாமிகளைத் தரிசித்துச் செல்ல முடியாதிருந்தது. அத்தகையோர்களது இருப்பிடங்களை நோக்கிச் சுவாமிகள் தாமாகச் சென்றார். குறிப்பாக மலை நாட்டுப் பகுதிகளுக்கு மாதமொருமுறையாதல் சென்று அங்கெல்லாம் வாழ்ந்த அடியவர்களை நல்வழிப்படுத்தி வந்தார். கொழும்புத் துறையில் உறையும் நாள்களிலும் பகற்போது முழுதும் நகரவீதிகளிலோ கிராமப்புரங்களிலோ நடமாடி அன்பர்களின் காட்சிக்கு எளியராய் அருள் புரிந்து வந்தார். சநாதனதர்மத்துச் சந்நியாசிகள் போன்று தனக்கென வாழாப் பிறர்க்குரியவராய் ஊரூராய்த் திரிந்து தாம் உணர்ந்த உண்மையை உணர்த்தி வந்தார். அவரது இறைபணி பல்துறைப் பட்டதாய்ப் பரந்திருந்தது. அப்பல்துறைகளில் சில அம்சங் களைப்பற்றி ஈண்டு ஓரளவு சுருக்கமாக அறிந்துகொள்வோம்.

## நற்சிந்தனை

யோகசுவாமிகள் அருளிச்செய்த அருள் வாசகங்கள் நற்சிந்தனை எனும் நூலுருப் பெற்றுள்ளன. நற்சிந்தனையில் பெரும்பாலானவை பாடல்கள். நூலிறுதியில் உரைநடைப் பகுதிகள் சிலவும் உள. பாடல்களோ உரைகளோ யாவும் பயிலும் தமிழில் அமைந்தவை. பாடல்களுட் சில அந் நாட்களில் வெகுசனப் பிரபலம் பெற்றிருந்த கீர்த்தனங்களின் மெட்டில் பாடப்பெற்றன. இத்தகைய வியத்தகு எளிமையும், வெகுசனத் தன்மையும் பொருந்தியனவாக இருத்தலினாற் படித்தோரிற் சிலர் நற்சிந்தனை வாசகங்களைச் சாமானியமாகக் கருதுதலும் உண்டு. இஃது தேசிக வேடத்திலல்லாமல் எல்லாரையும் போல்

திரிந்த யோகசுவாமிகளைச் சாமானியராகச் சிலர் கருதியதைப் போன்றதே. யோகசுவாமிகளை அண்டி வாழ்ந்த பாக்கியரான அன்பர்கள், அவரை உண்ர்ந்தார்க்கும் உணர்வரிய மகத்தாகக் கண்டது போலவே நற்சிந்தனையைப் பலகாலும் பயின்று பாராயனஞ் செய்து வரும் பாக்கியவான்கள் அது உணர்வரிய மெய்ஞ்ஞானத்தை உட்பொருளாகக் கொண்ட ஞானக் களஞ்சியம் எனக் காண்கின்றனர். இந் நற்சிந்தனையிலுள்ள அருள் வாசகங்கள் நூற்புலவோர் பாடிய பாச்செய்யுள்களையும் உரைச்செய்யுள்களையும் போன்றனவல்ல. இவை புலமையா லன்றி அநுபூதியில் விளைந்தவை. இவற்றை இயற்ற வேண்டுமென்ற சங்கற்பமும் யோகசுவாமிகளுக்கு இருந்த தில்லை. தமது திருமுன்னிலையில் இருந்த யாரேனும் அன்பர்க்கு வாக்கியப் பிரசாதம் வேண்டியுள்ளதென அவரது திருவுளத்தில் தோன்றினால் அவ்வேண்டுவார் வேண்டியதைச் சொரிந்தார். அவ்வேண்டத்தக்கவற்றைப் பெற்றுக்கொள்ளும் புண்ணியரான ஆராதகாதலடியவர்கள் அவற்றை கவனமாக எழுதிப் பக்குவ மாகப் பேணிவந்தனர். பெரும்பாலும் இவ்வாறு பேணப்பட்டு வந்த பாடல்களே நற்சிந்தனை எனும் நூலுருப்பெற்றன. அடிய வர்களால் பேணப்படா திருந்தால் இவ்வாசகங்களெல்லாம் மறையாயிருந்த தமது உண்மை நிலைக்கே மீண்டும் சென்று மறைந்திருக்கும். யோகசுவாமிகள் சொல்லச் சொல்ல இவற்றை எழுதும் பேறுபெற்ற அன்பர்கள் ஒன்றை ஐயத்திற்கு இடமின்றி உணர்ந்து வியந்தனர். அதென்னவெனில் ஏற்கனவே அட்சரவடிவில் அமைந்திருக்கு மொன்றைச் சுவாமி தமது காட்சியில் நேர்நேராகக் கண்டு சொல்லிக்கொண்டிருக்கிறார் என்பதே அது. இவ்வண்ணம் மறையாயிருக்கும் வாசகங்களைத் திறவிலே கண்டு கூறுவதை மந்திரம் எனப் பெரியோர் கூறுவர். ஆதலால் நற்சிந்தனைப் பாக்களை "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திரம் என்ப" என்னும் இலக்கணமமைந்த மந்திரப் பாக்கள் எனக் கூறுவது பொருந் துவதே. இவை மாயாப் பிறவி மயக்கம் போக்கி பிறப்பிறப்பில்லாப்

பெருநிலையை அருளவல்ல நன்மருந்தாக அமைவதால் அருளமுதம் எனவும் போற்றப்படுகின்றன. யோகசுவாமிகளும் நற்சிந்தனை எனும் நல்லமுதம் என்றே கூறினர்.

**நற்சிந்தனையின் திரண்டபொருள்.**

**ஏறக்குறைய நாநூறு பக்க அளவினதான "நற்சிந்தனை"** யின் திரண்டபொருளைச் சுருக்கமாக அறிய ஒருவர் நாடுவரேல் அவர் நற்சிந்தனையின் நுழைவாயிலிலே உள்ள நிழற்பட உருவில் அமைந்திருக்கும் சுவாமிகளின் திருமுகத்தை நோக்கு வார்களாக. திருவருளானது தக்கதோர் இடத்தில் பொறித் திருக்கும் சுவாமியின் கைப்பட எழுதிய அத்திருமுகம் நற்சிந் தனையின் பாயிரம் போன்று அமைந்திருக்கிறது. அதன் விரிவே நற்சிந்தனைத் திருநூலாகும். அத்திருமுகப் பாயிரம் மேல் வருமாறு:

உ

சிவமயம்

நீ உடம்பன்று, மனமன்று, புத்தியன்று, சித்தமன்று, நீ ஆத்மா. ஆத்மா ஒருநாளும் அழியாது. இது மகான்களுடைய அனுபவ சித்தாந்தம். இந்த உண்மை உனது மனதில் நன்றாய்ப் பதியக்கடவது. ஆனால் நீ கவனிக்க வேண்டியது ஒன்றுண்டு. அதாவது தருமநெறியிற் பிசகாதே. எவ்வுயிரும் பெருமான் திருமுன்னிலை எனச்சாதனை செய். கடவுள் உள்ளும் புறம்பு முள்ளவர்.

இப்படிக்கு
அவனே நானே

இதனினும் சுருக்கமாக ஒருவாசகத்தில் அறிய விழைவரேல் நற்சிந்தனைத் திருநூலின் முதற் பாடலின் முதல் வாசகத்தை நோக்குவார்களாக. "என்னை எனக்கு அறிவித்தான் எங்கள் குருநாதன்" என்னும் இவ் வாசகமே

நற்சிந்தனையின் சாராம்சமாகும். அஃதாவது நற்சிந்த னையின் நூற்பொருள் "தன்னையறியும் வித்தை" என்பதே. உபநிடத ஞானியரும் சோக்கிரட்டீஸ் முதலிய கிரேக்க ஞானியரும் இன்னும் இடமகன்ற ஞாலத்திலே தோன்றிய எண்ணிறந்த ஞானியரும் கூறிய தன்னையறியும் வித்தை பூத்தாரும் பொய் கைப் புனல் போன்று பொலிந்திருக்க யோகசுவாமிகள் இந்நாளிற் சுரந்த நற்சிந்தனை எனும் புதுப்புனல், நீர் இன்ப வெள்ளமாகப் பெருகித் தொண்டரையெல்லாம் அருள்நீரில் நீந்திக் குளிக்கும் நெஞ்சம் கொண்டவராய் ஆக்கும் நீர்மையதாய் உளது.

**தன்னை அறியும் வித்தை.**

தன்னை அறிதல் என்பது தன் உண்மை நிலையை உணர்தல். தன் உண்மை நிலை என்பது தான் ஆக்கையாக அன்றி ஆன்மாவாக உள்ளநிலை. ஆன்மா அழியா மெய்ப் பொருள். அது என்றுமுள்ள நித்திய வஸ்த்து. எங்குமுள்ள பூரணப் பொருள். சுத்த அறிவான சின்மயப் பொருள். சுத்த சுகமயமான ஆனந்தப் பொருள். இச் சச்சிதானந்த மயமான ஆன்மா போக்கு வரவற்றது. பிரிவறியாதது. மாறாதது. மறையாதது. ஆதி அந்த மில்லாதது. சோதிமயமானது. என்றும் இருந்தபடியே இருப்பது. இவ்வாறெல்லாம் கூறியபோதும் அஃது உரையுணர்விறந்து நின்று உணர்வதோருணர்வு எனக் கூறுவதே மிகப்பொருத்த மானது. இத்தகைய பேருணர்வை உரையுணர்விறந்து நின்றே உணர்தல் இயலும். அதாவது ஐம்புல அறிவு அதனை உணராது. மனோபாவனையால் அதனை கற்பனை செய்த லியலாது. சுயபுத்தி அதனை நெருங்காது. ஐம்பொறியும் ஆமை போல் அடங்க, மனம் ஊமைபோல் உறங்க, உயிர்புமற்றுச் சித்திரப்பாவை போல் இருக்கவேண்டும். அதாவது ஆக்கை எனும் மாயா இயந்திரத்தனு ஓய்ந்து கிடத்தல்வேண்டும். ஆறாறு தத்துவப்பேயும் வெந்துபோகவேண்டும். வெந்தவிடத்து தானான தன்மை வந்து தலையெடுக்கும். இவ் வாறு

தலையெடுத்த தானே தன்னை அறியும். இதனையே "தான் தன்னை அறியுமே" எனவும் "தன்னைத் தன்னால் அறிந்திட வேண்டுமே" எனவும் கூறுவது. இந்தத் தான் தன்னை அறிதல் என்பதில் இரு "தான்"கள் இல்லை. அஃது தான் ஒன்றே. அதுவே தன்மயநிலை. அத்தன்மய நிலை அறிவுமயமான சின்மய நிலை. அச்சின்மய நிலையில் அறியென்ற ஏவலுக்கு இடமேயில்லை. அது அறிவாக நிற்கும் நிலை. இந்தத் தன் மயமான சின்மயநிலை எமது சொந்தநிலை. இந்தக் கட்டற்ற பூரண சுதந்திரம் எமது என்றுமுள்ள இயற்கை. வீடு நமக்கு எப்போதும் சொந்தம். நாம் நாமாகவே இருக்கிறோம். நமக்கு ஒரு குறையுமில்லை. இந்த நம்து நிசசொரூபநிலை நம்மிற் பலருக்குத் தோன்றாதிருப்பதற்குக் காரணம் மறதியேயாம். பொருளல்லாதவற்றை பொருளென்று மதிமயங்கிய மருளினாலே இம்மறதி ஏற்பட்டது. மறதியைப் போக்கும் மருந்து மறந்து போனதை ஞாபகப்படுத்திப் பார்த்தலே. இவ்வாறு நினைவு படுத்தற்கு உலக ஆசைக் குழப்பங்கள் ஒன்றும் இருத்தல் கூடாது. மவுனமாக இளைப்பாறியிருத்தல் வேண்டும். பேயே போன்றிருந்து சிந்தித்துப் பார்க்கவேண்டும். சிந்தி சிந்தி சிந்தி சிவகதி என்றாங்கு இடையறாது சிந்தித்துச் சிந்தித்துச் சித்தனா தீதனாதலால் தன்னைத் தன்னால் அறியும் சலாக்கியம் உண்டாகிறது. இவ்வண்ணம் தன்னை அறியும் அறிவுக்குத் துணை நிற்கும் நல்லமுத மொழியே நற்சிந்தனை. நற்சிந்தனைத் திருநூலின் உயிர்நாதம் இதுவே. வெறும் விடயவிளக்கமாக இங்கு கூறப்பட்டவை, நற்சிந்தனைத் திருநூலில் சுவாநுபூதிப் பெருக்காக உள்ளன. ஆதலினால் நற்சிந்தனையை உருவேற்ற வல்ல உணர்வுப் பிழம்பு எனக் கூறுதலே தகும்.

" தங்கப் பொம்மை போல விருப்பேன்
சாம்ப சிவசிவ என்று சொல்வேன்
சிங்கக்குட்டி போல நடப்பேன்
தீயாரோடு கூட மாட்டேன்."

என்பன போன்ற நற்சிந்தனைகளில் சிங்கத்தின் கம்பீரம் கலந்த வீரம்சார்ந்த உணர்வு உளது.

" தேசகாலம் யாவையும் மறந்து நின்றே
சிறுபிள்ளையைப் போல மனம் சிறந்துகொண்டே
பேசவுமறியாமற் பேய்க்கோலங் கொண்டே
பெருமானைப் பார்த்து நின்று ஆடுமயிலே."

என்பன போன்ற பாடல்களிலுள்ள மோனப் பெருக்கு ஓர் உன்மத்த உணர்வோடு குழைந்து ஒளிர்கின்றது.



" சாந்தம் உபசாந்தம் சர்வம் பிரமமாம். சாந்தனையும்
மாந்தர் அன்புகூர்ந்து இங்ஙனக் கூறுவீர்."

என்பன போன்ற கீர்த்தனைகளில் உள்ள உபசாந்த உணர்வு பச்சைக் குழந்தையுடன் கதைபேசும் அன்னையின் பரிவுணர்வுடன் கலந்தொளிர்கின்றது. இத்தகைய உணர்வுப் பாடல்களைப் பாடி மகிழ்தலுடன் நில்லாது உளத்திற் பதித்து சிந்தித்துச் சிந்தித்துச் சித்திரக்காரன் தீட்டிய தீபம் போல் நித்தியவஸ்துவில் நினைப்பு மறப்பற்றிருக்கும் அனுபவத்தைச் சில கணங்களேனும் பெற்ற நற்சிந்தனை ஆர்வலர்கள் நற்சிந்தனையை ஒப்பற்ற ஞானக்களஞ்சியமாகக் கொண்டாடுவர். அவர்களுட் சிலர் "நூல் பல வேண்டேன், இஃதொன்றே போதும்" எனும் உறுதியுடன் ஒழுகுவர். நற்சிந்தனைத் திருநூலைச் சிவயோக சுவாமிகளின் மந்திர ரூபமாக மதித்து " உன்போ லொருவர் உலகினிலே உளரோ?" எனப் போற்றும் அதிபக்தரும் உள்ளனர்.

## அஞ்செழுத்து உண்மை

உயர்ஞான பூதரத்து உச்சியை வளைய வளைய வரும் உண்மை நெறியே நற்சிந்தனையின் உயிர் ஓசை எனினும் உபாய

நெறியும் போதுமளவு சொல்லப்பெற்றிருக்கின்றது. " பஞ்சாட்சரத்தை நெஞ்சில் துஞ்சாமலே செபி " என்பது நற்சிந்தனை.

" சிவசிவ என்னச் சிவ கதியாகும்"

" அஞ்செழுத்தாலே அரனடி காணலாம்
அஞ்செழுத்தாலே அகிலத்தை ஆளலாம்
அஞ்செழுத்தாலே அனைத்தும் உதித்தன
அஞ்செழுத்தாலே அனைத்தும் நிலைத்தன."

என்றவாறு அஞ்செழுத்து அதிசயம் அழுத்தி உரைக்கப் பெற்றிருக்கிறது.

**வையகத்தில் வாழ்**

கடவுளைக் காண்பதற்கு காவியுடுத்தும், தாழ்சடை வைத்தும், காய்கனி துய்த்தும், காயம் ஒறுத்தும், காடுதிரிய வேண்டியதில்லை. கடும் விரதமிருந்து உடம்பை வருத்த வேண்டியதில்லை. யாத்திரை செய்து தீர்த்தங்களாடித் திரியவேண்டியதில்லை. உலகை வெறுக்காது வையகத்தில் வாழுமாறு நற்சிந்தனை போதிக்கின்றது.

" வையகத்தில் வாழ் என்றான் எங்கள் குருநாதன்"
" இகலோகம் பரலோகம் இங்கே நீ கண்டுகொள் தம்பி"

என்பன நற்சிந்தனை வாசகங்கள். வையகத்தில் வாழ்ந்து வாழ்க்கைக் கடமைகளைச் சரிவரச் செய்து கடைத்தேறும் வழியை சுவாமிகள் போதித்துத் திரிந்தனர்.

" கருமஞ்செய்யாமையை விரும்பாதே"
" கருமத்தைப் பற்றாதே."

" செய்தலிலும் செய்யாமையிலும்
அது தங்கியிருக்க வில்லை" என்பது நற்சிந்தனை.

**நற்சிந்தனை உரைநடைப்பகுதியில் உள்ள சில போதனைகள்.**

" உறுதியுடன் சிங்கம் கானகத்தில் திரிவது போல உலக கானகத்தில் திரி."

" வெளிமாதிரி ஒன்றும் செய்யாதே, உனக்குள் நீ பெலத்துக்கொள்."

" ஒன்றுக்கும் பயப்படாதே, உற்சாகத்தோடு முன்னேறிச் செல்"

" வெற்றி உன் சொந்தம்."

" எதை நீ பாவனை செய்கிறாயோ அது நீ ஆவாய்."

" ஆசையை ஒழி, அதுவே சிவபூசை."

" எக்கருமத்தைச் செய்யும் பொழுதும் ஊக்கததோடும், சிரத்தையோடும், மனமகிழ்ச்சியோடும் செய்து பழகுதல் வேண்டும். அப்படிச் செய்து பழகி வந்தால் மன உறுதி உண்டாகும். அதாவது மனம் ஏகாக்கிரக சித்தத்தைப் பொருந்தும். பொருந்தவே ஆத்மசக்தி அதிகரிக்கும். நினைத்தகாரியம் நினைத்த மாத்திரத்திலே உண்டாகும்."

" பாடுபட அஞ்சுபவனுக்கு ஒரு பிரயோசனமும் உண்டா காது. பாடின்றி பட்டம் கிடையாதென்பது உலக வழக்கு."

" யாதும் நமது ஊர். யாவரும் நமது கேளீர்"

" நன்மையும் தீமையும் நாம் தரவருவன பிறரால் அன்று."

(இது புலம் பெயர்ந்து பிறநாடுகளில் வாழும் மக்களுக்கு நல்ல புத்திமதி.)

" எல்லா இடத்திலும், எல்லாரிடத்திலும் ஈசனைக் காண்."

**யோகசுவாமிகளின் சோதிப்பிரகாசம்.**

யோகசுவாமிகள் திருவடிக்கலப்புற்று மூன்று தசாப்தங்கள் கடந்துவிட்டன. இக்காலத்திலே சுவாமிகளின் சோதி அவர் நடமாடித்திரிந்த காலத்தினையும் விடக் கூடுதலாகப் பிரகாசிக்கத் தொடங்கியுள்ளது. சுவாமிகளின் திருவுளப்படி வடக்கிலும், கிழக்கிலும் நிறுவப்பெற்ற இரு சிவதொண்டன் நிலையங்களும் செம்மையான ஞானப் பண்ணைகளாக வளர்ந்துள்ளன. கிழக்கில் உள்ள சிவதொண்டன் நிலையத்தில் சுவாமிகளின் திருமேனி பிரதிட்டை செய்யப்பட்டிருப்பதும், வடக்கிலுள்ள சிவதொண்டன் நிலையத்தில் சுவாமிகளின் திருமேனி பிரதிட்டை செய்யப்பட உள்ளதும் குறிப்பிட வேண்டிய விடயங்கள்.

கொழும்பிலே வாழும் யோகசுவாமிகளின் திருக்கூட்டத்தினர் ஓர் அமைப்பினை ஏற்படுத்தி மாதந்தோறும் ஆயிலியப் பூசையும், அரிய பல சிவதொண்டுகளும் செய்வதும் சுவாமிகளது அருள்விலாசமேயாம். இலங்கை அரசாங்கத்துக் கல்வித் திணைக்களம் யோகசுவாமிகள் பற்றிய ஒரு பாடத்தினைப் பாடப்புத்தகத்தில் சேர்த்திருக்கும் செய்கையானது கற்கும் மாந்தர்கள் யோகசுவாமிகளைக் கற்றல் வேண்டும் எனத் துணிந்திருப்பதன் ஓரடையாளமாகும். சிதம்பரத்திலே வாழும் சிவதொண்டர்கள் தம் கல்விக் கூடத்தில் சிறுவர்களுக்கு நற்சிந்தனைப் பாடல்களைப் போதிப்பதும், சிவயோக சுவாமிகளை அறிந்துகொள்வதற்கு உதவியான பிரசுரங்களைப் பிரசுரிப்பதும் குறிப்பிடத்தக்கன. ஐக்கிய இராச்சியத்தில் நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு சிவதொண்டன் நிலையத்தை அங்கு வாழும் அன்பர்கள் ஏற்படுத்தியிருப்பது "இங்கிலாந்திற்

பேச வேண்டியது" என்ற சுவாமிகளின் திரிகால உணர்ச்சியின் வெளிப்பாடு போலும். இங்கிலாந்தில் இப்பொழுது உறைபவரான சுவாமிகளின் சீடர்களுள் ஒருவரான சந்த சுவாமிகள் (The Positive Thoughts for Daily Meditation) எனும் ஆங்கில நூலை வெளியிட்டிருப்பதும், அது இங்கிலாந்து அவுஸ்திரேலியா, கனடா ஆகிய நாடுகளிலுள்ள ஆன்ம நாட்டம் கொண்டோர் மத்தியில் பெருஞ்செல்வாக்குப் பெற்றிருப்பதும் யோகசுவாமிகளின் சோதிப்பிரகாசத்தின் ஓரடையாளம். ஹாவாய்த் தீவிலேயிருந்து பணிசெய்யும் சிவாய சுப்பிரமுனிவர் சுவாமிகளும் யோகசுவாமிகளின் திருநாமத்தைப் பரப்பும் பணியையே செய்து கொண்டிருக்கிறார்.

சுவாமிகளின் போதனைகள் சிறப்பாக தற்பொழுது புலம் பெயர்ந்து ஐரோப்பாவில் வாழும் தமிழ்மக்கள் ஆடம்பரமற்ற நன்னெறி வாழ்க்கை வாழ்வதற்கு வழிகாட்டியாக இருக்கும் இக்கட்டுரை, உங்கள் சிந்தனையைக் கவர்ந்த நற்சிந்தனைப் பாடல்களைப் படிக்க [illegible] சுவாமிகள் காட்டிய "அவனே நானே" எனும் தியானத்தில் ஈடுபட்டு வாழ வைப்பதாக.



* * * * * *

சிவதொண்டன் ஆண்டு மலரில்

(மலர் 61- இதழ் 1-2)

வெளியான கட்டுரையின் மறு பிரசுரம்.

சிவயோக சுவாமிகள் நம்பிக்கை நிதிய வெளியீடு.

**சிவயோக சுவாமிகள் நம்பிக்கை நிதியம்**

5, மூர் வீதி, கொழும்பு-6 தொ.பேசி: 580584

Colourdots ( Pvt.) Ltd., 31/21,Dawson Street, Colombo - 2. Telephone : 331439